உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.





# காரைக்காலம்மையார் புராணம்.

காரைக்குடி
தேவாரம்
அ. நடேச தேசிகரவர்களால்
திருத்தொண்டர் புராணத்திற்கிணங்க
எளிய நடையில்
யாவரும் தெரிந்து பயன்பெறுமாறு
சுருக்கமாய் எழுதப்பெற்றது.



1937.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# காரைக்காலம்மையார் புராணம்.

---

இஃது

சிவநேசச் செல்வர்கள் விரும்பிய வண்ணம்

காரைக்குடி

பி. அ. தேவார பாடசாலை

தேவாரம்

**அ. நடேச தேசிகரவர்களால்,**

திருத்தொண்டர் புராணத்திற்கிணங்க

எளிய நடையில்

யாவரும் தெரிந்து பயன்பெறுமாறு

சுருக்கமாய் எழுதப்பெற்று

காரைக்குடி,

'செட்டிநாடு' பிரஸில் அச்சியற்றப் பெற்றது.

1937.

---

3-0-4

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# காரைக்காலம்மையார் சரித்திரம்.

சீர்பெருங் கடலாற் சூழ்ந்து சிறப்புற்றோங்கிய சோழ வள நாட்டில் அரிசொன்மா நதி முதலான சிறப்பினை யுடைய அனேக நதிகள் இங்குவந்து சங்கமமாகின்ற பெருமையுடையதும், தருமராஜன் பூஜித்துப் பேறுபெற்ற திருத் தருமபுர க்ஷேத்திரத்திற்கு வடபாலுள்ளதும், நள மகாராஜனுக்கு சனி உபாதை நீங்கப்பெற்ற திருநள்ளா றென்னும் திவ்ய க்ஷேத்திரத்திற்கு கீழ்பாலுள்ளதும், புத்த நந்தியின் தலை யிடியினாற் சிதறுண்ட திருத்தெளிச்சேரி யென்னும் திவ்ய ஸ்தலத்திற்குத் தென்பாலுள்ளதும், சமுத்திர ராஜன் சதா தெரிசித்து வழிபாடு செய்யும் பெருமைவாய்ந்த கீழ்சமுத்திரத்திற்கு மேல்பாலுள்ளதுமாகிய இக்காரைமா நகரென்னும் இத்தலத்தில்,

ஓர்காலத்தில் நாரதாதி மகரிஷிகள் உலகில் மழை யின்மையால் சர்வ ஜீவராசிகளும் பசிப்பிணியால் வருத்த முறுதலைக்கண்டு கயிலாயபதியினிடம் சென்று முறையிட, சாக்ஷாத் சிவபெருமான், தமது அருட்சத்தியாகிய உமா தேவியாருக்கு ஆக்ஞாபிக்க பார்வதிதேவியார் மானிடவுருக் கொண்டு சாகம்பரி யென்னும் திருநாமம் தாங்கி இங்

கெழுந்தருளி ஸ்ரீகைலாசநாதர் சுந்தராம்பா ளென்னும் மூர்த்தியை பிரதிஷ்டை செய்து, பூஜித்து உலகிலுண்டாகிய பஞ்சத்தை நீக்கி சர்வான்மாக்களும் உய்யும்படி மாசம் மும்மாரி பெய்யுமாறு மேகராஜனுக்கு ஆக்ஞை செய்தருளிய பெருமை வாய்ந்ததும்,

அகஸ்தியர், கண்ணுவர், இரிசிகர், வாய்வுதேவர், காளமாதி மேகங்களினாலும் பூஜித்து தத்தம் மனோபீஷ்டங்களை அடையப்பெற்றதும்,

சந்திரனைவன் தட்சப்பிரமாவினது புதல்வியார் இருபத்தெண்மரையும் மணம் புரிந்து அவர்களுள் ரோகணியென்பாளை மட்டும் நேசித்து, மற்றவர்களை வெறுத்தமையால், மாதுலனும் குருவுமாகிய தக்கன் கோபாவேசத்தினால் சந்திரனுக்கு க்ஷயரோகமும், கலைகள் குறையவும் சாபமிட, அதனால் மனம் வருந்திக் குறையிரந்து வேண்ட, தக்கன் ஒருவாறு மனமிரங்கி, ஆக்ஞையிட்டனுப்பினபடியே, சந்திரன் ரோகணிதேவியோடும், இக் காரையம்பதியை அடைந்து, ஸ்ரீ கைலாயநாதரையும் சுந்தராம்பாளையுங் கண்டு தெரிசித்து, அருள்பெற்று, இவ்வாலயத்திற்கு வாய்வு திக்கில் தன்பெயரால் மூர்த்தி, தலம், தீர்த்தம், இம்மூன்றையும் பிரதிஷ்டை செய்து விதிப்படி பூஜித்து வந்தமைக்கு ஈசன் மனமகிழ்ந்து வெளிப்பட்டு "சந்திரா" உனக்கென்ன வரம் வேண்டுமென்றருள, சந்திரன் அடிபணிந்தெழுந்து சுவாமீ அடியேனுக்குற்ற க்ஷயரோகத்தையும், கலைக்குறையையும் நீக்கியருள வேண்டுமென்றும், மூர்த்தி தலம் தீர்த்தம் இம் மூன்றிற்கும் அடியேனுடைய நாமகரணத்தையே அளித்தருள வேண்டுமென்றும், அத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்

செய்து தேவரீரை தெரிசிப்பவர்களுக்கு, சகல ரோகங்களையும் நீக்கி அவ்வவர் வேண்டும் வரங்களை அளித்து அநுக்கிரகஞ்செய்தருள வேண்டுமென்று அடிபணிய, கிருபாநிதியாகிய சிவபெருமான் அவன் செய்த சிவபூஜைக்கிரங்கி கலைகள் குறைவுபடாமல் தமது சடாமகுடத்தில் தரித்து அவன் மனோரதப் பிரகாரம் அருள்செய்ய, அன்றுமுதல் மூர்த்தி சோமநாதரெனவும், தலம் சோமேஸ்வரமெனவும், தீர்த்தம் சந்திரபுட்கரணி யென விளங்கப்பெறுவதுமாகிய பெருமை வாய்ந்ததும்,

தும்புருவென்னும் கந்தருவ முனிவரின் புதல்வியாகிய சுமதியென்பாள் எளிதில் சிவபூஜை செய்து அரிதான முத்தியின்பத்தை அடையக்கருதி இக் காரைமாநகரையடைந்து ஸ்ரீ சுந்தராம்பாள் சமேத கயிலாயநாதரையும், ஸ்ரீ சோமநாயகி சமேத சோமநாதரையும் விதிப்படி பூஜித்து வந்ததின் பயனால் சுமதி புனிதவதியாராய் மீண்டும் இந்நகரில் திருவவதாரஞ் செய்த காதை வருமாறு.

சோழமண்டலத்திலே, காரைக்காலிலே வைசியர் குலத்திலே தனதத்த னென்னும் ஓர் வைசியரிருந்தார். அவர் செய்த தவப்பயனால் லெக்ஷிமியே வந்து அவதரித்தாளென்று சொல்லும்படியான பேரழகுவாய்ந்த புனிதவதியாரென்னும் ஓர் புத்திரியார் பிறந்தார்.

அக்குழந்தையை தந்தை தாயர் சுற்றத்தார் முதலானவர்களெல்லோரும் சீராட்டிப் பாராட்டி வளர்த்துவரும் நாளில் மங்கைப்பருவம் வர தங்கள் குலத்திற்கேற்ப மணம் பேசத்தொடங்கினார்கள். இப்படி யிருக்க,

நாகைப்பட்டினத்திலே வைசியர் குலத்துதித்த நிதிபதி யென்பவன் தன்னுடைய புத்திரனை பரமதத்தனுக்கு மணம் பேசும்பொருட்டு சில முதியோர்களை காரைக்காலுக் கனுப்ப, அவர்கள் தனதத்தச் செட்டியாரிடம் வந்து நீ பயந்த பைந்தொடியை, நாகை நிதிபதி மைந்தன் பரமதத்தனுக்கு மணம்புரியுமாறு கேட்டார்கள். அதற்கு அவர் உடன்பட்டது கண்டு, இச்சமாசாரத்தை நிதிபதியிடம் வந்து சொல்ல மிகவுங் களிப்புற்று ஆங்காங்கு திருமண ஓலைகளனுப்பி நன் முகூர்த்தநாளில் மைந்தனை மணக்கோலத்துடன் மங்கலவாத்தியம் முழங்க சுற்றத்தார்களோடு காரைக்கால் வந்து

அளிமிடைதார்த் தனதத்த னணிமாடத் துட்புகுந்து [துத்
தெளிதருநூல் விதிவழியே செயன்முறைமை செய்தமைத்
தளிரடிமென் னகைமயிலைத் தாதவிழ்தார்க் காளைக்குக்
களிமகிழ்சுற் றம்போற்றக் கலியாணஞ் செய்தார்கள்.

தனதத்தச் செட்டியார் மாளிகையின் உள்ளேசென்று செய்யவேண்டிய சடங்குகளை விதிப்படி செய்து மயிலை யொத்த சாயலையுடைய புனிதவதியாரை பரமதத்தனுக்கு சுற்றத்தார்கள் போற்றக் கலியாணஞ் செய்தார்கள், பின் மற்றையசடங்குகள் முடிவுற்றபின்பு, தனதத்தச் செட்டியாருக்கு வேறு பிள்ளையின்மையால் அவரை நாகைப்பட்டினத்திற்குப் போகவிடாமல் தன்னுடைய வீட்டிற்கு அருகிலே ஒரு மாளிகை கட்டுவித்து, அளவிறந்த திரவியங்களையுங் கொடுத்து, கணவரோடும் அதிலிருக்கச் செய்தார். பரமதத்தச் செட்டியார் அச்செல்வத்தை விருத்தி செய்து,

இல்லற தர்மத்தை ஒழுங்குபெற இருவரும் நடாத்திவரும் நாளில், புனிதவதியார் பரமசிவனுடைய திருவடிகளிலே அன்பு மென்மேலும்பெருக தம்முடைய வீட்டிற்குச் சிவனடியார்கள்வரின் அவர்களைத் திருவமுது செய்வித்து அவரவர் வேண்டியபடி பொன், இரத்தினம், வஸ்திரம் முதலானவெலாங் கொடுத்துவரும் நாளில்

ஓர் நாள் பரமதத்தச்செட்டியார்கடைக்குகாரியார்த்தமாக வந்தவர்களிற் சிலர் அவருக்கு இரண்டு மாம்பழம் கொடுக்க, அவைகளை வாங்கிக்கொண்டு அவர்கள் வந்த கருத்தை முடித்து, அக்கனியை மனைவியாரிடம் அனுப்ப மனைவியார் அவைகளை வாங்கி வைத்த பின்பு ஓர் சிவனடியார் பசியினல் வருந்தி வீட்டிற்குவர, புனிதவதியார் அன்போடு அழைத்து அவ்வடியவருடைய நிலையைக்கண்டு அமுதளிக்க, அச்சமயம் கறி முதலான பதார்த்தங்களாகாமையால்,

இல்லாளன் வைக்கவெனத் தம்பக்கன் முன்னிருந்த
நல்லநறு மாங்கனிக ளிரண்டினி லொன் றைக்கொண்டு
வல்விரைந்து வந்தணைந்து படைத்துமன மகிழ்ச்சியினுல்
அல்லறீர்ப் பவரடியார் தமையமுது செய்வித்தார்

மூப்புறமத் தளர்வாலு முதிர்ந்துமுடு கியவேட்கைத்
தீப்பசியி னிலையாலு மயர்ந்தணைந்த திருத்தொண்டர்
வாய்ப்புறுமென் சுவையடிசின் மாங்கனியோ டினிதருந்திப்
பூப்பயின்மென் குழன்மடவார் செயலுவந்துபோயினுர்.

கணவரனுப்பிய மாங்கனியி லொன்றைப் படைத்து திருவமுது செய்விக்க அவ்வடியவர் அக் கனியோடு திரு

வமுது உண்டு புனிதவதியாருடைய செயலை உவந்து போயினர்.

அவர் போனபின் பரமதத்தச் செட்டியார் வீட்டிற்கு வந்து ஸ்நான முதலான காரியங்களை முடித்து போஜனம் பண்ணும்பொழுது, மனைவியார் எஞ்சியிருந்த மாங்கனி யொன்றைக் கலத்திலே படைக்க, அதையுண்டு அதன் இனிய சுவையினாலே திருப்தியடையாமல் மற்றைக்கனியை யுங்கொண்டுவந்து வைக்கச் சொல்ல, மனைவியார் கொண்டு வருபவர்போல் போய் நின்றுகொண்டு சோகித்து

அம்மருங்கு நின்றயர்வா ருருங்கனிக்கங் கென்செய்வார்
மெய்மறந்து நினைந்துற்ற விடத் துதவும் விடையவர்தாள்
தம்மனங் கொண் டுணர்தலுமே யவாருளாற் றூர்குழலார்
கைமருங்கு வந்திருந்த ததிமதுரக் கனியொன்று

தம்மை விசுவசிக்கின்ற மெய்யன்பர்களுக்கு உற்ற விடத் துதவும், பரமசிவனைத் தியானித்து நிற்க, உடனே கடவுளுடைய கருணையினால் அதிமதுரமாகிய ஒரு மாங்கனி அவர் கையில் வர, அதைக்கொண்டு வந்து கணவருடைய கலத்திலே படைக்க; அதையுண்டு அதின் சுவை தேவாமிர் தத்தைப் பார்க்கிலும் சிறந்ததைபால், இது முன் நான் தந்த மாங்கனி யன்று, இது மூவுலகங்களிலும் பெறுதற் கரிதாயுள்ளது. நீ இதனை யெங்கே பெற்றாய் யென்று கேட்க, மனைவியார் அதைக்கேட்டு தமக்குத் திருவருள் உதவிய திறத்தை வெளிப்படுத்துவது தகுதியன்றென்று நினைத்தமையாலும், நிகழ்ந்ததைச் சொல்லமாட்டாதவரு மாயும், வருந்தி நின்று, பின் நிகழ்ந்தபடியே சொல்வதே

கடனென்று துணிந்து; நீர் தந்த கனிகளிலொன்றை ஓர் அடியார்க்கு அளித்துவிட்டமையால், அதற்கு யாது செய்வேனென்று, பரமசிவனைத் தியானித்து நின்றேன். அவருடைய திருவருளினால் இந்தக் கனி என் கையில் வந்திருந்தது என்று சொல்ல, அவன் அவ்வார்த்தையை நம்பாதவனாய், உனக்கு இந்தக்கனி சிவபெருமான் திருவருளினாலே வந்திருந்ததாயின் இன்னும் ஒரு கனி அழைத்துத்தா என்று சொல்ல,

பாங்ககன்று மனைவியார் பணியணிவார் தமைப்பரவி
யீங்கிதளித் தருளீரே லென்னுரைபொய் யாமென்ன
மாங்கனியொன் றருளால்வந் தெய்துதலு மற்றதனை
யாங்கவன்கைக் கொடுத்தலுமே யதிசயித்து வாங்கினான்.

புனிதவதியார் அவ்விடத்தைவிட்டுப் போய் பரமசிவனைத் துதித்து இன்னும் ஒரு கனி தந்தருளீரேல் அடியேனுடைய வார்த்தை பொய்யாய்விடும் என்று விண்ணப்பம் செய்ய, சுவாமியினுடைய திருவருளினாலே, ஒரு மாங்கனி அவர் கையில் வந்திருந்தது. அக்கனியைக் கொண்டுவந்து கணவர் கையிற்கொடுக்க, அவன் ஆச்சர்யமடைந்து வாங்க, வாங்கிய பழத்தைக் காணாதவனாகி மிகுந்த பயங்கொண்டு மனம் தடுமாறி அப்புனிதவதியாரைத் தெய்வமெனநினைந்து அவரைப் பிரிந்து வாழவேண்டுமெனத் துணிந்து, தன் கருத்தை பிறருக்கு வெளிப்படுத்தாமல் அவரோடு தொடர்பின்றி ஒழுகினான்.

அப்படி ஒழுகும் நாளில் ஒரு மரக்கலஞ் செய்வித்து தான் செல்ல விரும்பிய தேசத்திலே விரும்பப்படுகின்ற

அரும்பண்டங்களை அதில் நிறைய ஏற்றி, சுபதினத்திலே சமுத்திர ராஜனைத் தொழுது மாலுமி முதலியோரோடும் ஏறி அத்தேசத்தை அடைந்து வாணிபஞ்செய்து பொருளீட்டி, சிலநாட் சென்றபின் மீண்டும் அம்மரக்கலத்திலேறி பாண்டிநாட்டிலுள்ள ஓர் நகரத்தையடைந்து, அங்குள்ள ஒரு வைசியனுடைய மகளை விவாகஞ் செய்துகொண்டு பெருஞ் செல்வத்தோடு வாழும் நாளில் அம் மனையாள் வயிற்றிலே ஒரு பெண்குழந்தை பிறக்க, அப்பெண்ணுக்கு புனிதவதியா ரென்னும் பெயரையே யிட்டு களிப்புற்றிருந்தான்.

காரைக்காலில் கற்பினோடு இல்லறத்தை வழுவாது நடாத்திவரும் புனிதவதியாரும் அவர் சுற்றத்தார்களும் பாண்டிநாட்டில் ஓர் நகரத்தில் செல்வத்தை விருத்தி செய்துகொண்டு பரமதத்தச் செட்டியார் வாசஞ்செய்வதைக் கேள்வியுற்று அவர் நிலையை உணர்ந்து கவலைகூர்ந்து புனிதவதியாரைத் தாமே அவரிடத்திற் கொண்டுபோய் விடவேண்டுமென்று நினைந்து இரத்தினங்களா லிழைக்கப் பெற்ற சிவிகையில் ஏற்றிக்கொண்டுபோய் வருகின்ற சமாசாரத்தை அவருக்குச் சொல்லிவிட, அவன் அதனையறிந்து அச்சங்கொண்டு தன்னுடைய இரண்டாம் மனைவியோடும் மகளோடும் புனிதவதியாரிடம் வந்து அடியேன் உம்முடைய கருணையினாலே வாழ்கின்றேன், இப்பெண்ணுக்கும் உம்முடைய பெயரையே யிட்டேன் என்று சொல்லிக்கொண்டு அவருடைய பாதங்களிலே விழுந்து சாஷ்டாங்கமாக நமஸ்கரிக்க உடனே புனிதவதியார் தம்முடைய சுற்றத்தார் பக்கத்திலே அச்சத்தோடும் ஒதுங்கி நிற்க,

சுற்றத்தார்கள் வெள்கி, பரமதத்தனை நோக்கி நீ உன்னுடைய மனைவியை வணங்குவ தென்னை யென்றார்கள். அதற்கு பரமதத்தன் "இவரிடத்திலே ஒரு பெரிய அற்புதச் செயலைக் கண்டபடியால், இவர் தெய்வப் பெண்ணேயன்றி மானுடப் பெண்ணல்லர்" என்று துணிந்து இவரைப் பிரிந்தேன். இவரை நான் தொழுந்தெய்வமென்று கொண்டமையால் இக் குழந்தைக்கும் இவர் பெயரையே யிட்டேன். ஆகையால் யிவரை வணங்கினேன், நீங்களும் இவரை வணங்குங்களென்றான். அது கேட்ட சுற்றத்தார்கள் இது வென்ன ஆச்சரியம் என்று திகைத்து நிற்க, புனிதவதியார் கணவன் சொல்லிய வார்த்தையைக் கேட்டு பரமசிவனுடைய திருவடிகளைச் சிந்தித்து இவனுடைய கொள்கை யிதுவாயின் இனி யிவன்பொருட்டுத் தாங்கிய அழகு தங்கிய தசைப் பொதியை நீக்கித் தேவரீரைச் சூழ்ந்துநின்று துதிக்கின்ற பேய்வடிவை அடியேனுக்கு அளித்தருள வேண்டுமென்று பிரார்த்திக்க,

ஆனவப் பொழுதுமன்று ளாடுவா ரருளினாலே
மேனெறி யுணர்வுகூர வேண்டிற்றே பெறுவார்மெய்யில்
ஊனடை வனப்பையெல்லா முதறியெற் புடம்பேயாக
வானமு மண்ணுமெல்லாம் வணங்குபேய் வடிவமானார்.

அப்பொழுதே நடராஜப்பெருமான் திருவருளினாலே மாமிச முழுதையும் உதறி எற்புடம்பாக விண்ணுலகம் மண்ணுலக மெல்லாம் வணங்கும் பேய்வடிவமானார். தேவர்களும் முனிவர்களும் பூ மழை பொழிந்தார்கள், வான துந்துபி முதம் முழங்கின. அது கண்ட சுற்றத்தார்கள் அஞ்சி நமஸ்கரித்துச் சென்றார்கள்.

புனிதவதியார் தமக்குச் சிவபெருமானுடைய திருவருளினாலே கிடைத்த ஞானத்தைக்கொண்டு அற்புதத் திருவந்தாதி பாடத்தொடங்கினர்.

வெண்பா.

பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாங் காதல்
சிறந்து நின்சேவடியே சேர்ந்தே—னிறந்திகழு
மைஞ்ஞான்ற கண்டத்து வானோர் பெருமானே
யெஞ்ஞான்று தீர்ப்ப திடர்.

## திரு இரட்டை மணிமாலை

கட்டளைக் கலித்துறை.

கிளர்ந்தூர்ந்து வெந்துயர் வந்தடும் போதஞ்சி நெஞ்சமென்பாய்
தளர்ந்திங் கிருந்த றவிர்தி கண்டாய் தளராது வந்தி
வளர்ந்தூர்ந்த கங்கையும் வானத்திடைவளர் கோட்டுவெள்ளை
யிளந்திங்களு மெருக்கு மிருக்குஞ் சென்னி யீசனுக்கே.

என்று இவைகளைப்பாடிக்கொண்டு திருக் கைலாசகிரிக்கு மன சிலும்பார்க்க வேகத்தோடு சென்று,தலையினாலேநடந்து போய் மலையேறினர். உமாதேவியார் கண்டு ஆச்சரிய மடைந்து, சுவாமீ! இங்கே தலையினால் நடந்து ஏறிவருகின்ற எற்புடம்பையுடையவரது அன்பின் மகிமை இருந்தபடி யென்னை யென்று விண்ணப்பம் செய்ய, பரமசிவன் இங்கே வருகின்றவன் நம்மைத் துதிக்கின்ற அம்மை யென்றருளி.

இப் பெருமை பொருந்திய பேய்வடிவை வேண்டிப் பெற்றா ளென்று சொல்ல, பின் புனிதவதியார் சமீபத்தில் வந்த வுடனே, உலகமெல்லாம் உய்யும்பொருட்டு அவரைநோக்கி "அம்மையே" என்று அழைத்தார். அதுகேட்ட புனித வதியார் "அப்பா" என்று சொல்லிக்கொண்டு அவருடைய திருவடிகளிலே விழுந்து நமஸ்கரித்து எழுந்தார், சுவாமி அவரை நோக்கி "உனக் கென்னவரம் வேண்டும்" என்று வினவ; புனிதவதியார் வணங்கி நின்று

இறவாத வின்பவன்பு வேண்டிப்பின் வேண்டுகின்றார்
பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்புண்டே லுன்னையென்று
மறவாமைவேண்டு மின்னும் வேண்டு நான் மகிழ்ந்துபாடி
யறவாநீ யாடும் போதுன் னடியின்கீ ழிருக்கவென்றார்.

சுவாமி அடியேனுக்கு இறவாத பேரின்பமாகிய அன்பு வேண்டும், இனிப்பிறவாமை வேண்டும், பிறக்கினினும் தேவ ரீரை ஒரு காலமும் மறவாமை வேண்டும், இன்னும் தேவ ரீர் திருநிருத்தஞ் செய்யும் பொழுது, தேவரீருடைய திரு வடியின் கீழே சிவானந்தத்தை உடையேனாகி தேவரீரைப் பாடிக்கொண்டிருத்தல் வேண்டும், என்று விண்ணப்பஞ் செய்ய, சுவாமி அவரை நோக்கி நீ தென்றிசையிலுள்ள ஆலங்காட்டிலே நம்முடைய நடனத்தை தரிசித்து பேரா னந்தத்தோடு நம்மைப்பாடிக்கொண்டிரு" என்று அருளிச் செய்தார். அதுகேட்ட காரைக்காலம்மையார், சுவாமியை நமஸ்கரித்து அநுமதி பெற்றுக்கொண்டு, திருவாலங் காட்டுக்குத் தலையினால் நடந்து சென்று, சுவாமியினுடைய திருநடனத்தை தரிசித்து,

## திருவாலங்காடு மூத்த திருப்பதிகம்

பண்—நட்டபாடை

கொங்கைதிரங்கிநரம்பெழுந்து குண்டுகண்வெண்பற் குழிவயிற்று
பங்கிசிவந்திருப்பற்கணீண்டு பாடுயர்நீள்கணைக்காலோர் பெண்பேய்
தங்கியலறியுலறுகாட்டிற் றாழ்சடையெட்டுத்திசையும்வீசி
யங்கங்குளிர்ந்தனலாடுமெங்க ளப்பனிடந்திரு வாலங்காடே (1)

[வித்துப்
ஒப்பினையில்லவன்பேய்கள்கூடி யொன்றினையொன்றடித்தொக்க
பப்பினையிட்டுப்பகண்டைபாடப் பாடிருந் தந்நரியாழமைப்ப
வப்பனையணிதிருவாலங்காட்டு ளடிகளைச்செடிதலைக்காரைக் காற்பேய்
செப்பிய செந்தமிழ்ப்பத்தும்வல்லார் சிவகதிசேர்ந்தின்பமெய்துவாரே

## மூத்த திருப்பதிகம்

பண்—இந்தளம்

எட்டியிலவமீகைசூரை காரைபடர்ந்தெங்குஞ்
சுட்டசுடலை சூழ்ந்தகள்ளி சோர்ந்தகுடர்கௌவப்
பட்டபிணங்கள்பரந்தகாட்டிற் பறைபோல்விழிகட்பேய்
கொட்டமுழவங்கூளிபாடக் குழகனாடுமே (1)

சூடுமதியஞ்சடைமேலுடையார் சுழல்வார்த்திருநட்ட
மாடுமரவமரையிலார்த்த வடிகளருளாலே
காடுமலிந்தகனல்வாயெயிற்றுக் காரைக்காற் பேய்தன்
பாடல்பத்தும்பாடியாடப் பாவநாசமே (11)

என்னும் திருப்பதிகங்களையும் பாடி, சுவாமியுடைய தூக்கிய திருவடியின் கீழே சிவானந்தத்தை அனுபவித்துக்கொண்டு,

எக்காலமும் இருக்கின்ற. புனிதவதியாரென்னும் காரைக்காலம்மையார் இத்தலத்தில் திருவவதாரஞ் செய்யப்பெற்ற பெருமை வாய்ந்ததும்,

இவ்வம்மையாரை சுந்தரமூர்த்தி சுவாமிகளாலும் நம்பியாண்டார் நம்பிகளாலும். சேக்கிழார் சுவாமிகளாலும், உமாபதி சிவாச்சாரியார், முதலான பெரியோர்களாலும் போற்றி துதிக்கப்பெற்ற பெருமை வாய்ந்ததும் இன்னும் அநேக மகிமாதிசயங்களால் விளங்கப்பெறுவதுமாகிய இக் காரையம்பதியை அன்பர்கள் அடைந்து ஸ்ரீ கயிலாயநாதர் சுந்தராம்பாளைக்கண்டு தெரிசித்து காரைக்காலம்மையார் கழலடிகளைப் போற்றிவாழ்வோமாகவும்.

சுவாமி கைலாசநாதர், தேவி சுந்தராம்பாள்.

சுவாமி சோமநாதர், தேவி சோமநாயகி.

காரைக்காலம்மையார்

இம்மூன்றும் தனித்தனி ஆலயங்கள்.

தீர்த்தம் சந்திரபுட்கரணி முதலான தீர்த்தங்களுள.

முற்றிற்று.

சுபம்! சுபம்! சுபம்!



குறிப்பு:–பேரளம் லயனில் காரைக்கால் கோவில்பத்து என்ற ஸ்டேஷனை யுடையது ஸ்டேஷனிலிருந்து தெற்கே இரண்டு பர்லாங்கு தூரமுள்ளது. அன்றியும் நாகைப் பட்டினம் தரங்கம்பாடி மார்க்கமாகவும் வர பஸ் முதலான சவுகரியங்களும் உளது. இவ்வூரில் இன்னும் பல சிவாலயங்களும், வினாயகராலயங்களும், விஷ்ணுவாலயங்களும், உளது.

